


சென்னையில்
சித்ரா, பிரபாத், காமதேனு, ஸரஸ்வதி
மற்றும் தென்னுடெங்கும் வெற்றிகரமாக நடைபெறுகிறது





ஜுபிடர்

# கற்புக்கரசி

அற்புதமானதோர்
கற்பனைக் களஞ்சியம்




டைரக்ஷன்: A.S.A. சாமி

Uma July—57



# கலை அழகு மிகுந்து கவர்ச்சிகரமாகத் திகழ "பாக்கேஜிங்"

நீங்கள் தயாரிக்கும்
சரக்குகளை விற்பனைக்கு
அனுப்புவதற்கு முன்பாக,
அழகுறச்செய்ய ஏன்
"பாக்கேஜிங்"
நிபுணர்களைக் கலந்து
ஆலோசிக்கக்கூடாது?

உமா பிரிண்டர்ஸ் எந்தச் சரக்கிற்கும் ஏற்ற எழிலான தோற்றமும், பாதுகாப்புடன் கூடியதுமான, எல்லாவித அட்டைப் பெட்டிகள் தயார் செய்யத் தேவையான இயந்திர வசதி படைத்தவர்கள். நெடு நாளைய அனுபவம் உடையவர்கள். அவர்களைக் கலந்து ஆலோசியுங்கள். உங்கள் பணிபுரிய என்றும் உற்சாகத்துடன் இருப்பவர்கள்

# உமா பிரிண்டர்ஸ்

ஸ்தாபிதம்: 1945

உமா இல்லம், சென்னை-1, (தமிழ்நாடு).

தென்னிந்தியாவில், அச்சிட்ட கலர் 'கார்ட்டன்'கள், அட்டைப் பெட்டிகள் தயாரிப்பதில் முதன்மையானவர்கள்.

எங்களிடத்தில் ஓவியம், பிளாக்குகள் மற்றும் அச்சுவேலைகளுடன், ஆப்ஸெட் பகுதியும் உள்ளது.



EP

போன்: 2200. தபால் பெட்டி: 1377. தந்தி: ATTAPOTTY



# உமா

ஆசிரியர்: ஜி. உமாபதி

## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| செடி 5<br>மலர் 3 | ஜூலை, 57 | ஏவிளம்பி-ஸு<br>ஆடி - மீ |



தமிழினத்தின் பொறுமையை
அதிகமாகச் சோதிக்காதீர்கள் (தலையங்கம்) .... 7
வாழ்க ம. பொ. சி. பல்லூழி! .... 8
வள்ளுவர் – ம. பொ. சி. – பண்டாரநாயகா .... 9
பண்பு வெட்கப்படுகிறது (தம்பிக்கு) .... 10
உங்களுடன் ஒரு கணம் .... 12
கூண்டுக் குருவி .... 15
வாடா விளக்கு (தொடர்கதை) .... 18
மணி என்ன? .... 23
அதிசயம் .... 29
நெஞ்சின் நிலை .... 31
வெள்ளிச் சிலம்பு .... 33
வளரும் தமிழ் (மதிப்புரை) .... 37
நினைவு அலைகள் .... 38
முருகன் முன் நிற்க! .... 45
கற்புக்கரசி (பட விமரிசனம்) .... 49
ஒளி மீண்டது .... 52
பொன்னான சந்தர்ப்பம் .... 57
என்று காண்போம்? (கவிதை) .... 59
சந்தித்தோம்—சிந்தித்தோம் .... 60
எங்கள் இதயங்கள் பேசுகின்றன .... 67
கதை கதையாம்...! (பாப்பா உமா) .... 69
இவர்கள் எழுதுகிறார்கள் .... 71
திருட்டுப் பையன் .... 72


'உமா'வில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே. சம்பவங்களும் கற்பனையே.


துணை ஆசிரியர்
பூவை எஸ். ஆறுமுகம்



# தமிழினத்தின் பொறுமையை அதிகமாகச் சோதிக்காதீர்கள் !

தமிழகத்தின் அமைச்சர்களே ! இன்னும் எவ்வளவு காலம்தான் தமிழ் இனத்துக்கு ஏற்படும் இன்னல்களுக்குப் பரிந்து பேசாமல் இருக்கப் போகிறீர்கள் ?

ஐந்தாண்டுத் திட்டத்தின் நமக்கு முக்கிய தேவையான தொழில் வளங்களைப் பற்றியோ, உண்ண உணவு பற்ருக்குறை பற்றியோ, உடுத்தும் ஆடைகளைப் பற்றியோ, இருக்க இடத்தைப் பற்றியோ கேட்க மறந்து போனீர்கள்.

தேவிகுளம், பீர்மேடு, செங்கோட்டை பற்றியும் அவையிலே ஆதாரம் காட்டிப் பேசி, வாங்கியே முடிப்போம் என்றெல்லாம் முழக்க மிட்டு, பிறகு முயற்சித்து முடிக்கமுடியாமல் சும்மா இருந்துவிட்டீர்கள்.

மத்திய ஆட்சியிலே தமிழினத்துக்குக் கிடைக்க வேண்டிய முக் கியமான பதவிகள் கொடுக்கப்படாத பரிதாப நிலையைக் கண்டும் பதருமல் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறீர்கள்.

இமிழ்கடல் வரைப்பில் தமிழகம் என்று பெருமை பேசும் நாம் கல்வி, கலை, கலாச்சாரம், வீரம் இவை யாவும் ஒருங்கே அமையப் பெற்ற நமக்கு இத்துறையிலும் நியாயமான நீதி அளிக்கப்படவில்லை. இவைகளைப்பற்றியும் ஏன் என்று கேட்காமல் இருக்கிறீர்கள்.

இவற்றில் பல விஷயங்கள் கடந்து போனவை. இதோ, நடக்க விருக்கும் வடக்கெல்லையின் நீதியை எதிர்பார்த்து ஏங்கி நிற்கிறோம். எங்களுக்கு நீங்கள் அமைச்சர்களல்லவா? பின், ஏங்கி நிற்காமல் என்ன செய்வோம்?

தெலுங்கினத்தின் அமைச்சர்கள் மட்டும்தாஞ? கட்சி, மத, இன சார்பற்று விளங்க வேண்டிய பாராளும் மன்றத்தின் சபாநாயகர் உள்பட அந்த மக்களிடத்தில் அன்பு காட்டுகிறுர்கள். அவர்கள் கோரிக்கை அநியாயமானது என்று தெரிந்தும்கூட பரிந்து பேசும் நிலையைக் காண்கிறோம்.

இதோ, உங்களிடம் நாங்கள் உண்மையான – சரித்திர சம்பந்த மான தமிழினத்தின் பிரதேசத்தைக் கேளுங்கள் என்று ஞாபகமூட்டி னேம்; முறையிட்டோம்; முடிவில் உங்களால் சிறைக்கு அனுப்பப் பட்டோம். இத்தனை செய்தும், நீங்கள் எங்களுக்குப் பரிந்து பேசா விட்டாலும், அவர்கள் பேசும் பொய்யுரைகளுக்காவது மறுப்பு தந்திருக்கலாம். ஆனல், நீங்கள்தான் என்ன சொல்கிறுர்கள் என்று பார்க்காமல், யார் சொல்கிறுர்கள் என்று பார்க்கிறீர்களே !– எங்கே செய்யப் போகிறீர்கள்? இவை யாவும் மக்கள் மறந்து மன்னிக்க படாஸ்கர் நீதி அநீதியாக இருந்தால், மறுத்துப் பேசி மாகாணத்தின் உரிமையைக் காப்பாற்றுங்கள். அல்லது நீங்களும் அவர்களுடன் சேர்ந்து தமிழினத்தின் பொறுமையை அதிகமாகச் சோதிக்காதீர்கள்.

# வாழ்க ம. பொ. சி. பல்லூழி

'நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்திற்கு ஒரு சிலம்புச்செல்வர்' என்று பெருமையாகப் பேசப் படும் அழியாப் புகழுக்குப் பாத்திரமான தனித்தலைவர் திரு ம. பொ. சி. — அவர்களின் ஐம்பத்தோராவது ஆண்டு நிறைவு விழா கடந்த மாதம் 26-ம் தேதியன்று கோகலே மன்றத்தில் மிகவும் சிறப்பாக நடந்தது.

தம் உடல், பொருள், ஆவி மூன்றையும் தேச சேவைக்கெனக் காணிக்கை வைத்த செந்தமிழ்ச் செல்வரின் தியாகசீலம் பற்றியும், தேசிய கலாசாரம் பொருந்திய தமிழரசுக் கழகத்தைத் தோற்றுவித்து இலக்கியம், பண்பாடு, கலாசாரம் முதலானவற்றை வளர்த்து வரும் அவருடைய தொண்டு குறித்தும், தமிழகத்தின் தலைநகரைக் காப்பாற்றிக் கொடுத்துப் பின்னர் தெற்கெல்லையை மீட்டுத் தந்து, இப்பொழுது வடக்கெல்லையை மீட்கப் பாடுபட்டு வரும் அன்னாரது பொதுநலப்பணியைப் பற்றியும், தமிழ் அரியாசனம் ஏற அவர் அல்லும் பகலும் உழைத்ததைக் குறித்தும் எல்லாக் கட்சிகளையும் சார்ந்த நல்லறிஞர்கள் பலர் சொற்பெருக்காற்றித் தங்களது நன்றிக்கடனைத் தீர்த்துக் கொண்டார்கள்.

தமிழ் மண் கடமை தவரு த- நன்றி மறவாத நாடாக என்றென்றும் விளங்க வேண்டும். ஆகவே, சிலம்புச் செல்வர் அவர்கள் கன்னித் தமிழ் போல பல்லூழி காலம் வாழ அருள் புரியுமாறு தமிழ்ச் சக்தியை நாமும் பணிவன்புடன் வேண்டுகின்ருேம்.

# உலகம் சுற்றும் நேரு

அரிசி அரசியலில் முக்கிய அங்கம் வகித்துள்ள நேரம் இது; அணுகுண்டுபிரச்சினை அமெரிக்கா, பிரிட்டன், ரஷ்யா ஆகிய மூன்று நாடுகளையும் கடந்து உலகப் பிரச்சினையாகிப் பயமுறுத்திக் கொண்டிருக்கும் இக்கட்டான பொழுது இது; சிக்கனத்தின் அவசியம் ராஜ்யங்கள் தோறும் ஒலி பரப்பப்படும் சங்கடமான வேளை இது; 'முன்னேடி' என்ற புகழ் பெற கேரளம் பாடுபடும் அதிசயமான நேரம் இது.

இத்தகைய குழப்பங்கள் உருவாகிவிட்ட துன்பச் சூழ்நிலையிலே பாரதப் பிரதமர் நேருஜி மறுபடி தம்முடைய அயல் நாட்டுப் பயணத்தைத் தொடங்கியிருக்கிருர்.

சிரியா போன்ற நாடுகள் இந்தியாவின் தனிப் பெருந் தலைவரை அமோகமாக வரவேற்றன என்பதற்குப் பத்திரிகைச் செய்திகள் ஆதாரம் தருகின்றன. 'மக்களுக்கு நம்பிக்கையூட்டும் சமாதான தூதுவர்' என்று கௌரவம் அளித்திருக்கிருர்கள். ஆனந்தப்பட வேண்டிய தகவல்தான்.

ஆனல், இம்மாதிரிப் பிரயாணங்கள் இந்தியாவின் வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் எந்த வகையில் பயன்படுமென்பதைப் பொது மக்கள் உணரும் வண்ணம் நேருஜியின் திக்விஜயம் அமைய வேண்டும்.

# தமிழ் எழுத்தாளர் மாநாடு

ஐந்தாவது தமிழ் எழுத்தாளர் மாநாடு சென்னை ராஜாஜி மண்டபத்தில் கடந்த 22, 23 தேதிகளில் வெகு விமரிசையாக நடந்து முடிந்தது. நீதிபதி திரு எஸ். வரதாச்சாரியார் தலைமையில் முதுபெருந் தமிழ்த் தொண்டர்களான திரு சம்பந்த முதலியா

ருக்கும் திரு சோமசுந்தர பாரதிக்கும் கேடயங்கள் வழங்கப்பட்டன.

தமிழ் எழுத்தாளர்கள் பிற மொழிகளிலும் இடம் பெற வேண்டும் என்றும் பேசப்பட்டது. மகிழ்ச்சியுடன் வரவேற்கப் பட வேண்டிய செய்தி இது. ஆனால் இப்பேச்சு சொல் வடிவில் மாத்திரம் நின்று விடக் கூடாது என்பது நம் எச்சரிக்கையாகும்.

சென்னை ராஜ்யத்திற்கு 'தமிழ் நாடு' என்று பெயரிடுக எனவும் இம் மாநாடு ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. ஆட்சிப் பொறுப்பாளர்கள் செய்ய வேண்டிய கடமையை நிறைவேற்றுவதில் எழுத்தாளர் சங்கம் முழு மூச்சுடன் பணி புரிந்தால், இந்தப் பணி தமிழ்ச் சரித்திரத்தில் இடம் பெறும்.

''தமிழ் எழுத்தாளர் ஒவ்வொருவரும் தமிழ் மறையான திருக்குறளைப் படித்தறிய வேண்டும்; பிறர் மனம் புண்படாமலும் அதே நேரத்தில் அவர்கள் மதி திருந்தி நேர்வழி நடக்க உதவுவதாகவும் எழுத்துக்கள் அமைய வேண்டும். பண்பட்ட நிலையில் நின்று எழுத வேண்டும். எழுத்தாளர் தங்கள் எழுத்துக்களைச் செங்கோலாகவும், வேலாகவும் பயன்படுத்த வேண்டும்,'' என்று ம. பொ. சி. அவர்கள் பேசினார்கள்.

பேராசிரியர் திரு கல்கி அவர்கட்கும் திரு தேவன் அவர்களுக்கும் ஞாபகச்சின்னம் அமைத்து, அந்த நினைவு மண்டபத்திலேயே அடுத்த ஆண்டு மாநாடு நடந்தால், எழுத்தாளர் சங்கத்தின் அரிய சாதனையை அனைவரும் போற்றிப் புகழ்வார்களென்பது உறுதி. நல்ல செயல்களைச் சாதிக்கவேண்டும் என்பதற்கு இச் செயல் மற்றவர்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாகவும் அமையும்.

## திருவள்ளுவர்—ம. பொ. சி—பண்டாரநாயகா

சாதி, மதம், காலம், தேசம், மொழி முதலியவற்றால் உண்டாகும் வேற்றுமைகளைக் களைந்து, உலகத்துள்ள மக்கள் அனைவரும் ஒப்ப ஏற்றுக் கொண்ட முறையில் இயற்றப்பட்ட நூல் திருக்குறள். இதனை உலகத்தின் பல்வேறு மொழிகளிலும் பெயர்த்து எல்லா மக்களும் போற்றிப் புகழ்கின்றனர். இத்தகைய தனிப்பெருமை வாய்ந்த தமிழ் மறையைப் படைத்த தெய்வப் புலவர் திருவள்ளுவரின் விழா கடந்த மாதம் தமிழ் நாட்டிலே கோலாகலமாகக் கொண்டாடப் பட்டது. விழாவின் வெற்றி வள்ளுவரின் வெற்றி; தமிழின் வெற்றி.

இலங்கைத் தமிழ் மறைக் கழகத்தினர் ஆண்டுதோறும் திருக்குறள் மாநாடு நடத்தி வள்ளுவர் விழாவைச் சிறந்த முறையில் கொண்டாடி வருகிறார்கள். இம் முறை மேற்படி விழாவுக்குச் செந்தமிழ்ச் செல்வர் தலைவர் ம. பொ. சி அவர்களை அன்புடன் அழைத்திருந்தார்கள். ஆனால், இலங்கைப் பிரதமர் திரு பண்டாரநாயகா, சிலம்புச் செல்வருக்குத் தடை விதித்து விட்டார். இது தமிழுக்கு விதித்த தடை, தமிழ் மொழிக்குச் செய்த அநீதி என்பதை ஊரும் உலகமும் அறிந்து கொண்டன; தமிழ்ப் பற்றுக் கொண்ட பத்திரிகைகள் எல்லாம் இலங்கைப் பிரதமரின் அடாத செயலைக் கண்டித்துத் தலையங்கங்கள் தீட்டியிருக்கின்றன.

காரணம் காட்டாமல் ம.பொ.சி அவர்களுக்கு பண்டார நாயகா விதித்த தடை, அவர் பங்கு கொண்ட பஞ்ச சீலத்திற்கு

விரோதமானது. தமிழக அமைச்சர்கள் தடை விதித்த இந்த அநீதியை யாருக்கு விதித்தார்கள் என்று பார்த்தார்களே தவிர, எதற்கு—எந்த இனத்திற்கு விதித்தார்கள் என்று பார்க்க மறந்து போனார்கள். இந்த அநீதிக்குப் பரிகாரம் கோரும் பொறுப்பு நம்முடைய சென்னை அரசாட்சியின் கடமை; அத்துடன் இவ்விஷயத்தில் மத்திய ஆட்சியாரும் தக்க நடவடிக்கை எடுத்துக் கொண்டு ஆவன செய்ய வேண்டும். இல்லையென்றால், இலங்கையின் அரசியல் கண்ணோட்டத்திலே இந்தியா தாழ்ந்தே காணப்படுமென்பதையும் நினைவூட்டுகின்றோம்.

இலங்கை வாழ் தமிழர்களின் போராட்டம் சுமுகமான வழியில் தீர்வு காணும் நிலை ஏற்படுவதாகத் தெரியவில்லை. 'சிங்களம் மாத்திரமே அரசாங்க மொழி' என்ற சட்டத்தை எதிர்த்துப் போராடிவரும் இலங்கைத் தமிழர்கள் ஆகஸ்டில் சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப் போகின்றனர். இலங்கை அரசாட்சியில் தமிழ் மொழிக்கும் சிங்கள் போன்று அரசாங்க அந்தஸ்து சமநிலையில் ஏற்பட்டால்தான் மேற்படி போராட்டம் ஒய்வு பெறும். எனவே, திரு. பண்டார நாயகா மேலும் மேலும் தமிழர்களின் மனக் கசப்பைச் சம்பாதித்துக் கொண்டே போகாமல், தம்முடைய மனச்சாட்சியின் கண்களைத் திறந்து, தமிழ் மக்களின் மொழிப் பிரச்சினை-பிரஜா உரிமைப் பிரச்சினை ஆகிய இரண்டையும் நேர்மையான முறையில் தீர்த்து, அவர்களின் துன்பக் கண்ணீரைத் துடைத்துத்தான் தீர வேண்டும். இல்லையென்றால், கோரிய உரிமைகளை வெற்றியுடன் பெறும் வரை தமிழ் மக்கள் உறங்க மாட்டார்கள். பழைய தமிழ்ச் சரித்திரம் விளக்கிக் கொண்டிருக்கும் முடிவு இது. ★

# தம்பிக்கு

'பதி'

## பண்பு வெட்கப்படுகிறது!

அன்புள்ள தம்பி!

நம்முடைய நாட்டு மக்கள் கலாசாரத்தை ஒழித்து அழிவுப் பாதையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார்கள். இந்த நேரத்தில் நம்முடைய கடமையைச் செய்தால்தான் இந்தப் பழம் பெரும் தமிழகத்தின் பெருமையைக் காப்பாற்ற முடியும். இல்லையெனில் அவர்களையும் மீள வைக்க முடியாமல் நாமும் அதிலே அழிந்து போவோம்.

பார் தம்பி! நம் நாட்டில் ஒரு பெண் கற்பின் பெருமையை உணரா விட்டால், அவள் சமுதாயத்தில் ஒரு தீண்டப்படாதவளாகவும் மதிக்கத் தகாதவளாகவும் குறைத்து வைத்து, கற்பின் சிறப்பை காப்பாற்றி வந்தார்கள். ஆனால், இப்பொழுதோ கற்பிழந்தவர்கள்தான் அரசியல் வட்டாரங்களிலும் கலைத்துறையிலும் கனவான்கள் வீட்டிலும் காட்சியளிக்கிறார்கள். அவர்கள் இல்லத்திற்கு அமைச்சர்கள், நீதிபதிகள், அரசியல் தலைவர்கள், உயர்தர உத்தியோகஸ்தர்கள், ஏன், சமுதாயத்திலுள்ள எல்லாப் பெரிய மனிதர்களுமேதான் அங்கு சென்று சிறப்பிக்கிறார்கள்.

இதைப் பார்க்கும் கற்பரசிகள் ஒரு சிலர் கற்பின் பெருமை இதுதானா என்று பெருமூச்சு விட்டு, பாதை தவறுவதிலே இன்றைய சமுதாயத்தில் பங்கம் ஒன்றும் வரவில்லை என்பதாக நினைத்து, சறுக்கி விழ முயற்சிக்கிறார்கள். அப்போது அவர்களிடம் அந்தக் கற்பு ''என்னைக் காப்பாற்றுங்கள்'' என்று கெஞ்சுகிறது. கற்பரசிகளின் உயர்வை இமயத்தின் சிகரத்தைவிட—கற்பனைக்கும் எட்டாத அளவுக்கு—நம் நாட்டின் கடந்தகால இலக்கியகர்த்தர்கள் உயர்த்தி இருந்தார்கள். ஆனால் இன்று அந்தக் கற்பு வேதனைப் படுகிறது.

இப்போது, கற்பின் திண்மையும் அதன் பெருமையும் இன்று வெட்கப்படுவது போல் காட்சியளிக்கலாம். இன்றைய சமுதாயத்திலேயே மீண்டும் பழைமைக்கே பெருமை தந்து மதிக்கும் நிலை வளர்ச்சி பெற்று வருகிறது. நளாயனி, அருந்ததி, அனசூயை, சாவித்திரி, கண்ணகி கதைகள் கற்பரசிகளின் சக்தியைக் காட்டி, கற்பின் பெருமையைக் காப்பாற்றி வந்தன. அவைகள் நம்ப முடியாத கற்பனையென்றும் பகுத்தறிவுக்கு எட்டாத வெறுங்கதைகள் என்றும் சொல்லி, அதன் பெருமையைக் குறைக்க முயலுகிறார்கள்.

ஆனால் இவர்களின் இன்றையப் படைப்பான அற்பாயுள் இலக்கியங்கள் சமுதாயத்தையும் அழித்து, அவையும் அழிந்து போகின்றன.

குறை சொல்லும் இவர்கள் அதைவிடச் சிறந்த இலக்கிய இதிகாசங்களைப் படைத்து நாட்டின் பெருமையை உயர்த்த முற்பட்டிருந்தால், உண்மையாக மக்களின் நிரந்தரமான வரவேற்பு கிடைத்திருக்கும்.

ஆனால் காலத்தாலும் அழிக்க முடியாத சிரஞ்சீவித் தன்மை படைத்த இத்தகைய இலக்கியங்கள்தான் மீண்டும் தேவையென்பதைப் பலரும் புரிந்துவருகிறார்கள்.

இப்படித்தான் ஆண் மக்கள் ஒரு சிலர் பஞ்சமாபாதகங்கள் அனைத்தையும் செய்கிறார்கள். குறுக்கு வழியிலே சென்று பணத்தைத் திரட்டுகிறார்கள். சமுதாயத்தின் எதிரிகளான இவர்கள் இப்படி தற்காலிகமாக உயர்ந்து மாடமாளிகைகளுடனும், வாகன வசதிகளோடும் வாழ்கிறார்கள். இதைப் பார்க்கும் பண்புள்ளம் படைத்தவர்கள் தமக்கே உரித்தான உயர்ந்த பொக்கிஷமாகக் கருதும் பண்பை இழக்கயோசிக்கிறார்கள். பண்பு அப்போது பரிதாப

நிலையை அடைகிறது. இவை யாவும் நாம் பார்க்கும் போது, என்ன காண்கிறோம்? ஒழுக்கத்தோடும் உயர்ந்த பண்போடும் வாழ்வோரின் வாழ்க்கைத் தரம் உயராது என்ற தவறான முடிவுக்கு வந்து விடுகிறோம். இன்றைய சூழ்நிலை தரும் காட்சி அது.

ஆனால் தம்பி, பாதை தவறிச் சென்றவர்கள் பலகாலம்உயர்ந்து வாழ்ந்ததாகச் சரித்திரச் சான்றுகளில் இது வரையில் நாம் காணவில்லை. குறுக்குப் பாதையிலே உயர்ந்த அரசியல் தலைவர்கள் பலர் இன்று இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து போனார்கள். சொந்தச் சரக்கு இல்லாமலே போலி அறிஞர்களக நடித்தவர்கள் பின்னே அவர்கள் வேஷம் கலைக்கப்பட்டு வெறும் மனிதர்களாக ஆக்கப்பட்டார்கள். மற்றவர்களின் அறிவுத் திறன்களை யெல்லாம் பணத்தின் மூலம் தனதாக்கி சிந்தனைச் சிற்பிகளாக வாழ ஆசைப் பட்டவர்கள், பின்னே சிரிப்பிற்கு ஆளாக்கப்பட்டார்கள்.

இவர்களை ஒழிக்க உண்மைச் சக்தி படைத்தவர்கள் எல்லாம் வெளிவர அஞ்சுவதனால்தான், அக்கிரமக்காரர்களும், அயோக்கியர்களும், அடிமைப் புத்தி படைத்தவர்களும், நாகரீகத் திருடர்களும், நயவஞ்சகர்களும் நாட்டிலே பெருத்துப் போனார்கள்.

ஆதலால், இதிலேயிருந்து இவர்களைப் பற்றி நாம் புரிந்து கொள்ள வேண்டியது இன்னொரு முக்கிய விஷயமும் உள்ளது. குறிப்பிட்ட ஒரு துறையிலே மிகுந்த ஆற்றலும் அறிவும் பெற்றிருந்தால் மட்டும் போதாது: பொது அறிவும் பொதுச் சேவையும் சரளமாகப் பழகும் சுபாவமும் படைத்தால் தான் சமுதாயத்திலே அவர்கள் சக்தி பூரணமாக வெளிப்படும் என்பதையும் நீ புரிந்து கொள்ள வேண்டும்.

---

## செங்கோல்

அச்சக அமைப்பில் சில மாறுதல்கள் செய்யவேண்டியிருப்பதால், இவ்வார 'செங்கோல்' வெளிவரவில்லை. அடுத்த இதழ் வழக்கம்போல் ம. பொ. சி அவர்களின் சிலப்பதிகாரக் கட்டுரைத் தொடருடன் வெளிவரும்.

---

## போலீஸ்காரன் மகன்

திரு பி. எஸ். ராமையா உடல் நலமின்றி யிருப்பதால், மேற்படி தொடர்கதை இவ்விதழில் இடம் பெறவில்லை. இனி தொடர்ந்து இடம் பெறும். —ஆசிரியர்.

---

முன் சொன்ன கேடுகளைப் போக்கி,பண்டையத்தமிழகத்தின் பெருமையை உயர்த்த அன்புத் தலைவர் ம.பொ.சி. தமிழரசு இயக்கத்தைத் தோற்றுவித்தார். பத்தாண்டுகளாக அவரோடு நாமும் சேவை செய்து வருவதிலே பெருமை அடைகிறோம். அந்த மாசற்ற சேவைகளை தமிழினத்தின் துரோகிகளைத் தவிர, மற்ற எல்லோரும் மனமார வாழ்த்தியும் மதித்தும் வருகிறார்கள். இன்னும் நம்முடைய சேவை இந்நாட்டிற்கு மிக மிகத் தேவை என்ற சூழ்நிலை உருவாகி விட்டது. அதற்கு ஆவன செய்ய காஞ்சீபுரத்தில் நமது மாநிலத் தமிழரசுக்கழக பொதுக் குழு கூடுகிறது. அங்கே அங்கத்தினர்களும் பிரதிநிதிகளும் நம்மை ஆதரிக்கும் அளவற்ற ஆதரவாளர்களும் கூடப் போகிறார்கள். அதற்கு நீயும் நம் மீது அன்பு கொண்டவர்களை அழைத்துக் கொண்டு தவறாமல் வரவும். அங்கு வருவது, பேசாமல் உட்கார்ந்து கொண்டு இருப்பதற்காக அல்ல; இனி எப்படி நாம் தீவிரமாகச் செயல்ப் படவேண்டும் என்று உனக்குத் தெரிந்த யோசனைகளைத் தைரியத்தோடு சுருக்கமாக அங்கே எடுத்துச் சொல்ல வேண்டும்.

இதோடு நின்று விடாமல் இனித் தான் நீ நிறைய வாசகசாலைகள் அமைக்க முயற்சி செய்ய வேண்டும். மற்றவர்களைப் படிக்கத் தூண்டும் வகையில் முன்னே நீயும் அக்கறையோடு அவசியமான நூல்களைப் படித்து அவையிலே தைரியமாகப் பேசப் பழக வேண்டும். உன் போன்ற இளைஞர்களின் வளர்ச்சியை எதிர்காலத் தமிழகம் ஆவலோடு வரவேற்கக் காத்திருக்கிறதென்பதை மறந்து விடாதே.

உன் அன்புள்ள தமையன்.

# உங்களுடன் ஒரு கணம்...!



புத்தம் புதிய விளம்பரம் உங்கள் கண்களைத் தன்வயப்படுத்திக் கொண்டிருக்கும் நிலையிலே நீங்கள் இந்தச் சில வரிகளை இப்போது படிக்கத் தொடங்கியிருக்கிறீர்கள். 'இலக்கியச் சுவை'—படிக்கவும் கேட்கவும் சுவை பரப்பும் அழகுச் சொற்றொடர் இது. ''இலக்கியச் சுவை'யில் இலக்கியத்தைப் படித்து அனுபவிப்பதற்கான முறைகள் பற்றி—இன்றைய இளைஞரும் மாணவ-மாணவியரும் பொதுவாக எழுப்பும் கேள்விகளுக்கு விடைகளை உள்ளடக்கி—சிறு சிறு கட்டுரைகளாக எழுத நினைக்கிறேன். எளிமையான பொருளமைப்புடன் இந்த இலக்கியத்தொடர் அமையும்.''-தமிழ்ப் பேராசிரியர் திரு ம. ரா. போ. குருசாமி அவர்கள் எங்களுக்குத் தபாலில் சேர்த்த கடிதத்தின் ஒரு பகுப்பு இது. தீந்தமிழ் இலக்கிய விருந்தை அனுபவிக்க முப்பது நாட்கள் மட்டும் ஆவலுடன் காத்திருக்கும்படி தமிழார்வம் கனிந்த இதயங்களுக்குச் செய்தி தருகிறோம்.

'வாடா விளக்கு' தொடர்கதை ஏற்ற பணியை ஏற்றம் தரும் வகையில் செய்து வருகின்றது. பூவை, குகப்ரியை, வசுமதி ராமசாமி—இம்மூவரும் சந்தித்தார்கள்; சிந்தித்தார்கள். ஏழு பக்கங்களிலும் இலக்கிய மணம் கமழ்கிறது.

சிறுகதைகள், கட்டுரை, கவிதை முதலியவற்றின் கீழ் பெரும்பாலும் அறிமுகமான பெயர்களே காணப்படுகின்றன; நாங்கள் வைத்த பரீட்சையில் மேற்படி எழுத்துக்கள் தேர்வு பெற்றன; எனவே, 'அறிமுகம்' என்ற சொல் உங்களுக்கும் நிறைவு தருமென்பது எங்கள் துணிபு.

பிரபல கதாசிரியர் திரு வல்லிக்கண்ணன் குழந்தை மனத்தைத் தத்துவக் கண் கொண்டு பார்த்துப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார். திரு அ. வேதாசலத்திற்கு ஆதரவாளர்கள் சேர்ந்து வருகிறார்கள். தாயுள்ளத்தைப் புதுக் கோணத்தில் நிறுத்திப் பேசவைக்கிறது அவரது சிந்தனைப் பேனா. கவிஞர் திரு மு. சண்முகம் புனைந்த பாடல் அழகுச் சொற்களின் தொகுப்பு; நல்ல கற்பனைக்கு ஆதாரம். 'இரண்டாவது அம்மா'வை அறிமுகம் செய்கிறார் திரு 'ஸ்ரீவத்ஸன்.'

''புராணம் திரும்புகிறது,'' என்று நாங்கள் சொன்னோம். ஓவிய மன்னர் திரு கே. மாதவன் அவர்கள் 'மெய்தான்,' என்று நிரூபித்திருக்கின்றார். ஆயர்குலத் துதித்த மாயனின் அந்த அஞ்சன வண்ணத்தினைப் பார்த்துக்கொண்டிருந்தாலே போதும், நம் வயிறு பசியை மறந்துவிடும்!...ஆனால், அதோ, அபலை ராதை சிந்தை திறந்து பேசுவதை நாம் மறக்க முடியுமா? 'நேசம் மறக்கவில்லை நெஞ்சம்—எனில் நினைவு முகம் மறக்கலாமோ?' என்று கேட்கிறாள். உடனே வேய்ங்குழல் நாதம் எழுப்ப, விந்தைச் சிரிப்புடன் ஓடிவந்து 'மாயம்' செய்கிறான் அந்தப் பேசருந் தெய்வம். ஆஹா, ராதை பாக்கியவதி!

வணக்கம்.

ஆசிரியர். ★

# வாழும் தமிழ்




பிறைகுடி

## தமிழை வளர்ப்பது எப்படி?

*ஏ. வி. இராமன்; தமிழகம், சென்னை-1; ரூ. 0–12–0.*

தெய்வத் தமிழ் மொழியை வளர்க்கும் பணியில் அரசாங்கத்தைக் காட்டிலும் தனிப்பட்டவர்கள்தாம் அதிகமான ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள். தமிழ் வளர வழி என்ன, எப்படித் தமிழை வளர்ப்பது என்பது போன்ற கேள்விகளை எழுப்பி, அவற்றுக்கு மட்டும் பதில் சொல்வதுடன் நிற்காமல், துணைச் செய்திகளைப் பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார், ஆசிரியர். முழுமையடையும் வகையில் பெரிதாக இந்நூலை வெளியிட்டிருக்கவேண்டும் – நிரம்பின ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன்.

## அணிந்துரைகளும் மதிப்புரைகளும்

*ஜீவபந்து ஸ்ரீபால்; திருத்தக்க தேவர் இலக்கிய மன்றம், சென்னை-1.*

திருவாளர் ஜீவபந்து ஸ்ரீபால் அவர்களையும் அவரது தமிழ்ப் பணியையும் தமிழகம் நன்கு அறியும். 'இளங்கோவடிகள் சமயம் யாது?' முதலான அவரது உயர்ந்த ஐந்து நூல்களுக்குத் தமிழகத்துப் பத்திரிகைகளும் தமிழன்பர்களும் அளித்த மதிப்புரைகளின் தொகுப்பே இந்நூல். புதிய முயற்சி. மேற்குறித்த ஐந்து நூல்களையும் ஆரம்பத்திலிருந்து கடைசிவரைப் படிக்கத் தூண்டும் இது என்பது உறுதி.

## அழகு ரோஜா

*மாப்பஸான்–காரை ஏ.எம். அலி; பிரேமா பிரசுரம், சென்னை – 24; ரூ. 3–0–0.*

தமிழிலே ஒரு சிலருக்குக் 'கதை' கொடுத்த வள்ளலான பிரெஞ்சு மேதை மாப்பஸானின் 'பெல் அமி' என்ற பிரசித்தமான நவீனத்தின் மொழி பெயர்ப்பு இது. பொறுமையுடன் படிக்கும் அளவுக்குச் சீரிய முயற்சி எடுத்துப் பணிபுரிந்திருக்கிறார்.

## இரு துளிக் கண்ணீர்

*கா. அப்பாத்துரை; ஔவை நூலகம், பிராட்வே – சென்னை-1; ரூ. 1–8–0.*

தாமஸ் ஹார்டியின் கதை ஒன்றினையும், பிரேம் சந்த் எழுதிய கதை ஒன்றையும் தமிழாக்கித் தந்து, அவை இரண்டுக்கும் புது மாதிரியாக 'இருதுளிக் கண்ணீர்' என்று பெயரிட்டிருக்கிறார் ஆசிரியர். இரு கதைகளையும் சிறப்பான தமிழில் தந்திருப்பவர் பன்மொழிப் புலவர் கா. அ. அவர்கள். கதைகளில் மட்டும் அவரது தமிழ் ஓரளவு சரளமாக்கப்பட்டால் தான் நல்லது.

## கலையும் வயிறும்

*'அகிலன்'; புதுமைப் பிரசுரம், பெண்ணாடம்; ரூ. 1–8–0.*

வின்ஸ்டன் சர்ச்சில் பிரசித்தி பெற்ற எழுத்தாளர். அவர் எழுத்தாளர்களின் பெருமையைப்பற்றியும் அவர்களது வாழ்வின் சிறப்புப் பற்றியும் பல இடங்களில் பேசியிருக்கிறார்; எழுதியிருக்கிறார். கலையையும் வயிற்றையும் இரு துருவமாக்கத் துடிக்கும் அருமைத் தமிழ் நாட்டில் அவை இரண்டையும் ஒன்றெனப் பிணைக்கும் அன்புப் பணியும் தேவையென்பதற்கு இப்புத்தகம் நல்ல எடுத்துக்காட்டு. கட்டுரைகள் ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்பு பெற்றிருந்தால் இன்னும் சிறப்பாக அமைந்திருக்கும். ★

# நினைவு அலைகள்

'ஸ்ரீவத்ஸன்'

"சித்தி, சித்தி! என்னைப் பாருங்கோ!"

பாகீரதி கண்களை விழித்து மிரள மிரளப் பார்த்தாள்.

"என்ன சித்தி, என்னைத் தெரியல்லியா? அப்படிப் பார்க்கிறேளே? உங்க பொண்ணுருக்கு இல்லையா நான்? நீங்க என்னை மறந்தாலும் நான் உங்களை மறக்கலே சித்தி," என்றாள் ருக்கு.

பாகீரதியின் கண்களில் நீர் அருவியாகக் கொட்டியது. "யாரது, ருக்குவா?" என்றாள் பாகீரதி. மறுபடி நினைவிழந்தாள்.

"ருக்கு, அதற்குள் பேச்சுக் கொடுக்காதே. நன்றாக மயக்கம் தெளியட்டும்," என்று சொன்னான் அவள் கணவன் கோபாலன்.

2

அரை மணி நேரம் சென்றபின் பாகீரதிக்கு மயக்கம் தெளிந்தது.

ரமணி

''ஏன்ணு, என் சித்திக்கு ஒன்றுமில்லையே, பிழைத்து விடுவாங்களல்லவா.....?''

''ஒண்ணும் அபாயமில்லை ருக்கு. அவளைப் பிழைக்க வைக்க வேண்டியது என் பொறுப்பு. இதோபார். உன் சித்தி கண்ணைத் திறக்கிருள். இனி பயமில்லை.''

''சித்தி, சித்தி! இப்போ எப்படியிருக்கு?''

''...ஆ, நான் எப்படி இங்கே வந்தேன்?''

*ஆமாம்; நாடகத்தைத் தனித்தனி நாடகப் பாத்திரங்களின் வாழ்க்கை வரலாருகப் பிய்த்து எடுத்துக் காட்டுவதும் நாடகத்தைச் சிதைப்பதாக முடியும். நூல்களின் ஊடாட்டத்திலேயே ஆடையின் அழகு விளங்குவதுபோல—தனி நூல்களிலும் வேருக ஓர் ஒற்றுமை அழகு பொலிவதுபோல—நாடகத்திலும் பாத்திரங்களின் தனி வாழ்க்கைச் சிறப்பினைவிட அவர்கள் வாழ்க்கையின் ஊடாட்டம்தான் சிறப்படைகிறது.* —தெ. பொ. மீ.

''என் அதிர்ஷ்டம்தான் உங்களை இங்கே கொண்டு வந்து சேர்த்தது. சித்தி, இதுதான் உங்க பேத்தி பூமா. அசாத்திய விஷமம். இவன்தான் பேரன் குமார். பூமா பூமிக்கு நெருப்பை வச்சா, குமார் ஆகாசத்துக்கு நெருப்பு வச்சுடுவான். அவ்வளவு பரம சாதுக்கள்!''

பாகீரதி ஆச்சரியத்தால் கண்களை மூடி மூடித் திறந்தாள்.

ருக்கு காப்பி கொண்டுவர உள்ளே போனுள்.

3

'' இதோ பார், பாகீரதி. இவதான் உன் மூத்தாள் பெண் ருக்கு. இனிமே நீதான் இவளைக் கவனிச்சுக்கணும். ருக்கு, இதோ பார் உன் சித்தி. எங்கே சித்திக்கு நமஸ்காரம் பண்ணு.''

இருபது வருடங்களுக்கு முன்பு ஒரு நாள் இப்படித்தான் சுந்தரேசய்யர் தன் மூத்தாள் பெண் ருக்குவைத் தன் இளையாளுக்கு அறிமுகப் படுத்தினர் — பாகீரதிக்கு ஞாபகம் வந்தது.

அப்போது ருக்குவுக்கு இரண்டு வயது. யார் அவளைப் பார்த்தாலும் அள்ளி அணைத்து அப்படியே முத்தமிடுவார்கள். அவ்வளவு அழகு.

பாகீரதியும் ருக்குவிடம் அன்பாய்த்தான் இருந்தாள். அடுத்த வருஷம் பாகீரதிக்கு சாந்தா பிறந்தாள். அதன் பிறகு பாகீரதியின் போக்கு மாறி விட்டது. அதுவுமல்லாமல், சாந்தா கன்னங்கரேலென்று மண்டை பெரியதாகப் பெரிய கண்களுடன் பார்க்க மிக விகாரமாய் இருந்தாள். தன் பெண் தன் மூத்தாள் பெண்ணைவிட அழகில் ரொம்பவும் மட்டம் என்ற விஷயம் அவளுக்கு ருக்குவிடம் ஒருவித அசூயையையும் பொருமையையும் உண்டு பண்ணியது.

ருக்குவைக் காரணமில்லாது கோபித்து வந்தாள். அவள் ஏதாவது செய்தால் 'ஏன் செய்தாய்' என்றும்; செய்யாமல் இருந்தால் 'ஏன் செய்யாமல் இருக்கிருய்' என்றும் பாகீரதி சொல்லுவாள்.

4

''சித்தி, இந்தக் காப்பியைக் கொஞ்சம் சாப்பிடுங்கோ. இந்தக் குழந்தைகள் என்னைப் படுத்தறபாடும் ஒரு நாள் போறதும் எனக்கு யுகமாயிருக்கு,'' என்று சொல்லிக் காப்பியைக் கொடுத்தாள் ருக்கு.

பாகீரதி படுத்தபடியே காப்பியை வாங்கிச் சாப்பிட்டாள்.

'இதுகள் என்னைப் படுத்தபாடு ஒரு நாள் போறது ஒரு யுகமாய்யிருக்கு' என்று ருக்கு சொன்னதை நினைத்துப் பார்த்தாள்.

5

மூத்தாள் குழந்தையை இளையாள் படுத்துவது உலகத்திலே புதிது இல்லைதான். ஆனல் அவள் ருக்குவைப் படுத்தியது கொஞ்சம் அதிகம் என்றே சொல்ல வேண்டும்.

இவ்வளவு தூரம் படுத்தியும் ருக்கு வாய் திறப்பதில்லை. 'சித்தி, சித்தி' என்று ஒட்டியபடியே இருந்தாள். சாந்தா ருக்குவைச்

சதா படாத பாடு படுத்தி வந்தாள். அப்போதுகூட வாய் திறப்ப தில்லை. நல்ல சோறு, நல்ல பாவாடை கிடையாது. ஓர் ஆறுத லானபேச்சும் கிடையாது. சுந்தரே சய்யருக்கு இதையெல்லாம் கவனிக்கப் பொழுது இருந்தால் தானே? இவ்விதம் சித்தியிடம் அவஸ்தைப் பட்டும்கூட புன்முறுவ லுடன் ருக்கு இருக்கும்போது அவர்தான் எப்படி பாகீரதியைத் தப்பாக எண்ண முடியும்...?

## 6

வேலையை யெல்லாம் முடித் துக்கொண்டு ருக்கு பாகீரதியிடம் வந்து உட்கார்ந்து கொண்டு, "சித்தி, உடம்பைப் பிடிக்கட் டுமா?" என்று ஆரம்பித்தாள்.

'இந்தப் படுபாவி ருக்குவை துன் பத்திற்குள்ளாக்கியதற்கு என் உடம்பைப் பிடித்து விடறுளாமே? சிறு வயசில் இவள் மென்னி யையே பிடித்து வந்த என்னை இவள் ஏன் இப்படி நேசிக்கிருள்?'

"என்ன சித்தி. நீங்கள் ஒரு காரியம் செய்து விட்டு எனக்குத் தெரியாது என்றுதானே நினைத் துக்கொண்டிருக்கிறீர்கள்?" என் ருள் ருக்கு. பாகீரதி திடுக்கிட் டாள். 'அப்படியானுல்தான்செய்த காரியம் இவளுக்குத் தெரிந்து விட்டதா? அப்படியிருந்துமா என்னை நேசிக்கிருள்?' — பாகீரதி யின் மனச்சாட்சி குத்தியது.

"நீ என்ன சொல்றே, ருக்கு? நான் என்ன செய்தேன்?"

"சொல்லட்டுமா?"

"சொல்லேன்." — பாகீரதியின் குரல் 'படபட'வென நடுங்கியது.

"வயத்திலே பொறந்த பெண் மாதிரி நாடகம் நடிக்கிரு. என்ன ஆனுலும் பெற்ற பெண் ஆகமாட் டாள். ரொம்ப கரிசனப்பட்டவ மாதிரி நடிக்கிறதைப் பார். மகா கள்ளி' என்று நீங்கள் என்னைத் தப்பாக நினைக்கிறீர்கள். இப்படி நினைக்கிறதுதான் நீங்கள் செய்த காரியம்.... நான் சொல்றது சரி தானே?"

பாகீரதிக்குப் பெருமூச்சு வந் தது. அது அவளுக்கு ஆறுதல் மூச்சு—'நல்லவேளை, நான் செய் தது அவளுக்குத் தெரியவில்லை.'

## 7

அவள் ருக்குவுக்குச் செய்த பெரிய அநீதியல்லவா அது? அதை அப்போது எப்படிச் செய் தாள் என்பதை இப்போது நினைத் துக்கூடப் பார்க்க முடியவில்லை.

"இதோ பார் பாகீரதி, இப்பவும் என் ஆபீஸிலே ஒரு புது மானேஜர் வந்திருக்கார். நல்ல சுபாவம். நம்ம ருக்குவோட அழகைப் பற்றி கேள்விப்பட்டு எதிர்ஜாமீன்கூட வேண்டாம்னு சொல்லி ருக்குவை கல்யாணம் செய்து கொள்ள ஆசைப் படுகிருர்," என்ருர் சுந்த ரேசய்யர். அப்போது ருக்கு கலி யாணப் பருவத்தில் வளைய வந்து கொண்டிருந்தாள்.

"சம்பளம் மாதம் இருநூறு ரூபாய். அவர் நல்ல சிவப்பு நிறம். தாயார் தகப்பனுருக்கு ஊரில் நிறைய நிலம் இருக்கு. ஒரே பிள்ளை. வர வர சம்பளம் உயர்ந்து ஐநூறு ரூபாய் கூடப் போகும். பத்தாயிரம் ரூபாய் எதிர் ஜாமீன் கொடுத்துக்கூட யார் யாரோ

---

### ஆரியர் – திராவிடர்

விஜயாலய சோழன் முதல் மூன்ருவது இராஜேந்திர சோழன் வரையில் முன்னூறு ஆண்டு காலம் சோழ சாம் ராஜ்யம் சிறப்புற்று விளங்கிய காலத்தில், தமிழகத்தில் ஆரியர் – திராவிடர் என்ற வேற்றுமையை மக்கள் கனவிலும் கருதியதில்லை என்று அக்காலத்திய கல் வெட்டுகள், செப்புப் பட்டயங்கள் அனைத்திலிருந்தும் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

—'கல்கி'

---

வந்தார்களாம். அவர் நம் ருக்கு வுக்குக் கிடைப்பது ருக்குவின் அதிர்ஷ்டம்,'' என்றார்.

அவர்கள் ருக்குவைப் பார்க்க வந்தார்கள். அவர்களுடைய பணக்கார தோரணையும் நல்ல சுபாவமும் மாப்பிள்ளையினுடைய அழகு—படிப்பு முதலியனவும் சேர்ந்து பாகீரதியின் மனத்தில் ஒருவித அசூயையை உண்டு பண்ணி விட்டது.

'ருக்குவுக்கா இவ்வளவு பணக் கார இடமும் கண் நிறைந்த கணவ னும்? என் பெண் சாந்தாவுக்கு இந்த வரன் கிடைக்குமா? கிடைக் காதுதான். என் பெண்ணுக்குக் கிடைக்கா விட்டாலும் ருக்குவுக்கு அந்த வரன் குதிரக் கூடாது'— அவள் மனம் பொறாமைத் தீயால் மூட்டப் பட்டது. அநேகமாக எல்லாம் முடிவாகும் தருவாயில் திடீரென்று கலியாணம் நின்று விட்டது.

''எந்தப் பேயோ, என்னுடைய குழந்தை தலையில் மண்ணை வாரிப் போட்டு விட்டாள். நல்ல வரன் தட்டி விட்டது. என் பெண் ருக்கு வுக்கு சித்தஸ்வாதீனம் சரியில்லை என்றும் அடிக்கடி காக்கைவலிப்பு வருவதாகவும் அவள் அழகுக்காக ஆசைப்பட்டு மோசம்போகவேண் டாம் என்றும் எந்தப் படுபாத கியோ சம்பந்திக்கு எழுதிப் போட்டுக் கலைத்து விட்டாள். அது சுத்தப்பொய் என்று எவ்வளவோ சொல்லியும் அவர்கள் கேட்க வில்லை. இப்படி மொட்டைக்கடிதம் எழுதியவள் உருப்படாமல் போவ துடன் அவள் பெண்ணுக்கும் இதே கதி நடக்க வேண்டும்,'' என்று சாபமிட்டார் சுந்தரேசய்யர்.

எப்படியோ ருக்குவுக்கும் ஏழை கம்பவுண்டர் கோபாலனுக்கும் திருமணம் நடந்தது.

சாந்தா பெரிய இடத்து மாட்டுப்பெண் ஆனாள்.

## 8

'' அப்பா செத்துப் போன போது, உங்களைப் பார்த்தது; நான் போட்ட கடிதங்களுக்குப் பதில்கூடப் போடவில்லையே சித்தி....?'' என்று ஓர் ஆரஞ்சை உரித்துக் கொடுத்தாள் ருக்கு.

'ஆமாம், பாகீரதி பதில் போட வில்லைதான். அப்பா செத்துப் போயாச்சு, இன்னும் என்ன சித்தி உறவு? நாளைக்குப் பிரசவம் என்று சொல்லி இங்கே வரவா? என் னிக்கு அவர் செத்துப் போனாரோ அன்றே உறவு விட்டு விட்டது' என்று எண்ணினாள் பாகீரதி.

''என்னமோ போலே இருக்கு ருக்கு. அப்புறம் நிறையப் பேசு வோம். சித்த தூங்கறேன்,'' என் றாள் பாகீரதி.

தூக்கம் வரவில்லை. கண்ணை மட்டும் மூடிக் கொண்டாள் பாகீரதி.

## 9

ஐந்து ஆண்டுகளிலே எவ்வளவு சம்பவங்கள்! — கணவன் இறந்த பிறகு வீடு வாசலை விற்று விட்டு சாந்தாவிடமே போய் விட்டாள் பாகீரதி. வீடு விற்ற பணத்தைத் தன் மகள் சாந்தாவிடமே கொடுத்து விட்டாள்.

ஒரு வருட காலம் சென்றது. சாந்தாவும் அவள் கணவனும் டாம் பீகமாக வாழ்ந்து வந்தார்கள். பாகீரதி வீட்டில் இருந்தது பிடிக்க வில்லை அவளுக்கு. அவளைச் சமை யற் காரியாக நடத்தினார்கள்.

அவர்கள் அவளை வெறுத்தது மல்லாமல் வீட்டை விட்டே துரத் தும் அளவுக்கு வந்துவிட்ட நிலமை யைக் கண்டு அங்கிருந்து புறப்பட் டாள் பாகீரதி. பெண்ணாவது மண் ணாங்கட்டியாவது என்று வாழ்க் கையில் சலிப்பு ஏற்பட்டு விட்டது.

அதன் பிறகு அவள் கிராமத்தில் தன்னுடைய தாயார் வீட்டுக்குப் போய் விட்டாள். அங்கு மூன்று வருஷங்கள் இருந்தாள். அவள் தாயாரும் இறந்து விட்டாள். இவ ளும் படுத்த படுக்கையானாள். அப் பொழுதுகூட சாந்தா வரவில்லை.

அவள் கணவனுக்கு மேலைநாட்டில் ஆறு மாதம் பயிற்சி; அவனுடன் அவளும் போய் விட்டாள்.

சென்ற ஒரு வாரமாகவே பாகீரதியின் மனத்தில் ஒருசபலம். ருக்குவுக்கு தான் இழைத்த கொடுமைக்குத்தான் கடவுள் தன்னை இப்படி தண்டிக்கிறார் என்று நினைத்தாள். அவள் மனம் அவளைச் சுட்டது. எப்படியும் ருக்குவிடம் போய் மன்னிப்பு கேட்பது என்று தீர்மானித்து அவள் விலாசத்தைக் கண்டு பிடித்து அங்கு போனாள். அவள் கணவன் மறுபடி வைத்தியக் கல்லூரியில் படித்து டாக்டராகி யிருப்பதாகத் தெரிந்து கொண்டாள்.

அன்று அவள் வீட்டை அடையாளம் கண்டுபிடித்து வாசற்படி அருகில் போனபோது திடீரென்று மயக்கம் போட்டு விழுந்தாள். யாரோ நோயாளி என்று நினைத்து ருக்குவின் கணவன் அவளை உள்ளே கொண்டுபோய்ச் சேர்த்தான். அதே சமயம் அங்கு வந்த ருக்கு அவளைத் தன் சித்தி எனக் கண்டு கொண்டாள்.

## 10

"ருக்கு, நீ தெய்வப் பெண். நான் செய்த கொடுமைக்கு நீ என்னிடம் காட்டும் அன்பு கடவுளுக்கே பொறுக்காது!" – அழுகைக்குறை யாகச் சொன்னாள் பாகீரதி.

"பேசாமல் இருங்கோ, சித்தி. இன்றைக்கு நான் நன்றாயிருப்பது உங்களால்தானே? தாயாரில்லாத என்னை இரண்டு வயது முதல் பதினெட்டு வயது வரை ஆளாக்கியது நீங்கள்தானே....? என்னை நீங்கள் கொடுமையாக நடத்தியதாக நீங்கள் ஏன் தப்பாக நினைக்கிறீர்கள்? நீங்கள் என்னைக் கண்டிப்பாக நடத்தியதால்தான் நான் இன்று வாழ்க்கையில் வெற்றி காண்கிறேன். உங்களை நான் நினைக்காத நாளே இல்லை. ஆனால் நீங்கள்தான் மறந்துவிட்டீர்கள்," என்றாள் ருக்கு. அவள் கண்களில் நீர் துளித்தது.

"உனக்கு நான் செய்த கொடுமைக்கு சிகரம் வைத்தாற்போல் நான் செய்த ஒரு காரியம் உனக்குத்தெரிந்தால், உன் மனம் என்ன பாடுபடும், தெரியுமா? நான் மட்டும் அந்தக் காரியம் செய்யாதிருந்தால் இன்று நீ ஆயிரம் ரூபாய் சம்பள உத்தியோகஸ்தர் மனைவியாய் பங்களா–கார் வைத்துக் கொண்டு உன்னத ஸ்திதியில் இருந்திருப்பாய்! உனக்கு வரவிருந்த கணவனுக்கு உன்னைப் பற்றி மொட்டைக் கடிதம் எழுதியது இந்தப் பாவிதான். இப்படியும் செய்திருப்பேனா என்று நினைக்காதே. மூத்தாள் பெண் என்ற அசூயை என்னை அப்படிச் செய்யத் தூண்டியது," என்றாள் பாகீரதி.

"சித்தி, இதன் மூலம் நீங்கள் எனக்குச் செய்திருக்கும் உதவிக்கு நான் எவ்வளவு ஜென்மம் எடுத்து உங்களுக்கு உழைத்தாலும் ஈடாகாது. ஆம்; அது உங்களுடைய உதவிதான். என்னை ஏழையாகப் பார்த்தாலும் சுமங்கலியாகப் பார்க்க முடிகிறது. தாங்கள் மட்டும் அப்படிப்பட்ட காரியம் செய்யாதிருந்தால், இன்று என் நிலைமை சொல்லவே....வாய் கூசுகிறதே....!" என்றாள் ருக்கு.

"நீ என்ன சொல்றே ருக்கு?" என்று பரபரப்புடன் கேட்டாள் பாகீரதி.

"எனக்கு முதல் முதல் பார்த்த வரன் நாலு வருஷம் முந்தி ஆபீஸ் சம்பந்தமாக வெளிநாடுகளுக்கு ஆகாய விமானத்திலே போன போது விபத்தில் உயிர் துறந்து விட்டார். நீங்க கேள்விப்படவில்லையா?" என்றாள் ருக்கு.

'தெய்வமே, நான் ருக்குவுக்குச் செய்த தீவினை கடைசியில் நல்ல உதவியாகவே வாய்த்து விட்டது. எல்லாம் உன் கருணை!' என்று சொல்லியவாறு ஆனந்தக் கண்ணீர் பெருக்கினாள் ருக்குவின் சித்தி பாகீரதி. ★

உருவகக் கதை :

# ஏன் வளர்ந்தாய் தென்னை மரமே!

அ. இராமமூர்த்தி

காவிரிக் கரையில் விண்ணை நோக்கி நிமிர்ந்து கம்பீரமாக நின்ற ஒரு தென்னை மரம் தன் கூந்தற் கற்றையைக் காற்றிலே அலசி ஆனந்தமாக ஆடிக்கொண்டிருந்தது. கொஞ்ச தூரத்தில் நாணற் புல் ஒன்று காற்றோடு உறவாடி ஒயிலாக அசைந்தாடியது.

தென்னை அந்த நாணலை உற்றுப் பார்த்தது—இன்னும் அதன் ஆனந்தத் தாண்டவம் ஓயவில்லை. "ஏ, அற்ப நாணற்புல்லே! வானை யளாவும் என் கம்பீர உருவத்தைப் பார். என் பசுந்தோகையின் எழிலைப் பார். என் பச்சைக் கூந்தலிலே பறவையினம் அமர்ந்து பாட்டொலித்து எனக்கு இசை விருந்திடுவதைப் பார். என்னை நம்பி எத்தனை மானிடக் குடும்பங்கள் வாழ்கின்றன, பார். என்னால் தான் இந்தக் கரையே அழகு பெறுகிறது. என்னால் இந்த உலகம் எவ்வளவோ பயன் பெறுகிறது. ஆனால் உன்னால் உலகத்தில் யாருக்கும் ஒரு பயனுமில்லை....! இவ்வளவு மகத்துவம் கொண்ட என்னோடு வெறும் அற்ப புல்லான நீ போட்டி போடுவதா....? என்னோடு போட்டி போட உனக்குத் தகுதியோ திறமையோ இல்லையே!" என்று தென்னை கர்வச் செருக்கோடு கோபக்குரலிலே சொல்லியது.



பொறுமை நிறைந்த நாணலோ எதிர்த்து ஒன்றும் பேசவில்லை; ஆட்டத்தை நிறுத்திவிட்டு அமைதியாக இருந்தது. பொன்னி நதியிலே புது வெள்ளம் பொங்கிப் புரண்டோடிக் கொண்டிருந்தது. சுழித்தோடும் புதுப்புனல் தென்னையின் தூரிலிருந்த மண்ணைக் கொஞ்சங் கொஞ்சமாக அரித்துத் தென்னையைக் கீழே சாய்த்து விட்டது! அந்தக் கரை வழியே வந்த இருவர் சாய்ந்து கிடக்கும் தென்னை மரத்தைப் பார்த்தார்கள். "இந்தத் தென்னை மரம் இருந்த இடத்திலும் நாணற் புல் இருந்திருந்தால் இந்தத் தென்னை மரம் கீழே விழாமல் காப்பாற்றப் பட்டிருக்கும்," என்றான் ஒருவன்.

"இந்த நாணற்புல் மாத்திரம் இங்கு இல்லாமலிருந்தால், இரு கரைகளுமே கரைந்து எல்லாத் தோப்புக்களும், பயிர்கள் நிறைந்த வயல்களும் அழிந்து போய் மனித சமுதாயத்திற்குப் பெருத்த இழப்பு ஏற்பட்டிருக்கும். பார்ப்பதற்கு அற்பப் புல்லாய்த் தோன்றினாலும் அதன் சக்தி பெரியதுதான்," என்றான் மற்றவன்.

சாய்ந்து கிடந்த தென்னையின் காதில் இந்தச் சொற்கள் அலை மோதின. அதன் மமதையும் கர்வமும் அழிந்தொழிந்தன. 'ஆம்; நாணற்புல் அற்பமாகத் தோன்றினாலும் அதன் சக்தி மகத்தானது தான்; அதன் உதவி யிருந்திருந்தால், நான் இந்தக் கதிக்கு ஆளாகியிருக்க மாட்டேன்' என்று எண்ணியது. கண்ணீர் விட்டது. ★

பலகணிகளைத் திறந்தேன். வாடைக் காற்று என் முகத்தில் வீசியது. உஷ்ணத்தால் தகித்துக் கொண்டிருந்த என் உள்ளத்திற்கு இதை உணரச் சக்தி ஏது?

"இந்தாப் பாருங்க, குமுதாவுக்குக் காலையிலேயிருந்து காய்ச்சல் அடிக்குது. நானும் எனக்குத் தெரிஞ்ச நாட்டு வைத்தியமெல்லாம் செஞ்சு பார்த்திட்டேன். நிற்கவே இல்லை."

என் மனைவி மீனு பேச்சை முடிக்கவில்லை. சிறகிழந்த பறவை வையின் நிலையானது என் நெஞ்சு.

"மீனுவுக்கு ஜுரமா? இப்ப என்ன செய்யறது? இங்கேருந்து அறந்தாங்கி ஆறுமைல் இருக்கே? பஸ் எதுவும் இல்லையே? எப்படிப் போறது?"

"நம்ம அடுத்த தெருவிலே கம்பவுண்டர் ஒருத்தர் வந்திருக்காரு. அவர் ஏதோ மருந்தெல்லாம் கொண்டாந்து ஆஸ்பத்திரி மாதிரி வச்சிருக்காரும்; அவருகிட்டே பிள்ளையைத் தூக்கிக்கிட்டுப் போங்க."

பகல் முழுதும் உளியும், சுத்தியலும் கொண்டு வேலை செய்துவிட்டு அலுப்புடன் வீட்டிற்குள் வந்த நான், என் ஒரே மகளின் கஷ்ட நிலையைக் கண்டவுடன், கல் தரையில் விழுந்த கண்ணாடித் தம்ளரின் தன்மையை அடைந்து விட்டேன். என் மனம் என்னவெல்லாமோ எண்ண ஆரம்பித்து விட்டது. பிறந்த உடனே பெற்ற தாயைப் பறிகொடுத்த என் குமுதா—ஊரே அதிசயிக்கும் வண்ணம் சித்தியின் அரவணைப்பிலே செல்வமாக வளர்ந்த என் குழந்தை—இந்தப் பயங்கரமான விஷ ஜுரத்துக்குப் பலியாகிவிட்டால்....?

நினைக்கையிலே என்னுடைய நெஞ்சு வலித்தது; விம்மிற்று.

குமுதாவை அணைத்த வண்ணம் என் மனைவி என்னை நோக்கி வந்து கொண்டிருந்தாள். அவள் கண்களும் முகமும் ஏககாலத்தில் என்னைக் கெஞ்சின.

* * *

"கம்பவுண்டர் ஐயா!...."

"யார், சிற்பி வேலாயுதமா? விளக்கு வைக்கிற நேரத்திலே வந்திருக்கிறுயே, என்ன விசேஷமோ...?"

"பிள்ளைக்கி ரொம்ப முடியலே; நீங்கதான் காப்பாத்தணும்."

"பணம் கொண்டு வந்திருக்கிருயா?"

"என் நிலைமை உங்களுக்குத் தெரியாதுங்க. எட்டியத்தாளி சிவன் கோவிலுக்கு ரெண்டு சிலை அடிச்சுக் கொடுத்திருக்கிறேனுங்க; மாதக் கடைசியிலே பணம் வரும். வந்ததும் தந்துடுவேன்."

"சிலை"—இந்த இரண்டெழுத்து வார்த்தை கம்பவுண்டர் கந்தசாமியின் உள்ளத்தில் புது வெள்ளம் போல் பாய்ந்தது.

"பரவாயில்லை வேலாயுதம், வந்து பார்க்கிறேன்."

பல பேர்களின் உயிரை எமனிடமிருந்து கைப்பற்றியும், எமனுக்கு அனுப்பியும் அனுபவசாலியான அவர் வாயிலிருந்து கருணைத் தொனியோடு நல்ல வாக்கு வந்தது. நான் மெய்ம்மறந்தேன்.

# முருகன் முன் நிற்க!

'வேதியன்'

அன்பு காட்டியவன் பண்பு காட்டவில்லை; சுயநலம் காட்டிய வழி அவனைச் சட்டத்தின் நுழை வாசலில் நிறுத்தியது...!



என்னல் இந்த அதிர்ச்சியைத் தாங்க முடியவில்லை. கோர்ட்... சுப்பிரமணியர்... சிலை! — எதையுமே அறியாத நான் பொய்ச் சாட்சி சொல்வதா?.... என் மனசை ஏமாற்ற என்னல் முடியுமா? என் வாயிலிருந்து எந்த வார்த்தையும் வெளிவரவில்லை.

குழந்தை குமுதாவுக்கு அதிகக் கவனமாகச் சிகிச்சை செய்தார். ஒரு ஊசியும் போட்டார்.

குமுதாவின் முகத்தில் ஜீவகளை தோன்றியது.

என்னுடைய தந்தை மனம் நிம்மதி பெற்றது.

''வேலாயுதம், உன்னுலே எனக்கு ஒரு காரியம் ஆகணும்,'' என்ருர் கம்பவுண்டர்.

''என்னலேயா? என்ன வேணும்னுலும் சொல்லுங்க; ஒரு நொடியிலே முடிச்சுடுறேன்.''

''வேலாயுதம், நான் சொல்வதைக் கொஞ்சம் கவனமாகக் கேள்....எனக்கு நீ ஒரு சின்ன உபகாரம் செய். அதனுலே உனக்கு எந்தக் கஷ்டமும் இல்லை. நிறையப் பணம் தருகிறேன். உன் மகளையும் காலணக்கூடச் செலவில்லாமல் காப்பாத்தித் தருகிறேன்,''—கம்பவுண்டர் பேச்சு என் இதயத்திலே தேனைப்பாய்ச்சியது.

''சொல்லுங்க, ஸார்!''

''இன்னும் பத்து நாளிலே அறந்தாங்கி மேஜிஸ்ட்ரேட் கோர்ட்டிலே எனக்கு ஒரு ஈரங்கி இருக்கு. அப்போது என் வக்கீல் உன்னை ஒரு கேள்வி கேட்பாங்க; அதற்கு நீ 'ஆமாங்க, அந்த சுப்ரமணியர் சிலையை நான் மட்டும் தாங்க செய்தேன்' என்று மட்டும் நீ சொல்லிவிடு; நான் பிழைத்துவிடுவேன்!''

''என்ன வேலாயுதம், அடிச்சு வச்ச சிலை மாதிரி ஆயிட்டியே?''

''இல்லேங்க, நாளைக்கு வந்து முடிவு சொல்றேன்.''

'கம்பவுண்டருக்கு என்ன முடிவு சொல்வது? பெரிய மனிதரின் கோபத்திற்குஆளானல் என்குடும்பத்துக்கே ஆபத்தாயிற்றே! அப்பால் குழந்தையின் கதி....? அதற்காக கண்ணுல் காணுததை—ஏன், காதால்கூடக் கேட்டறியாததை நானே செய்ததாகப் பொய்சொல்வதா? நான் நித்தம் வணங்கும் அன்னை அகிலாண்டேஸ்வரி மீது ஆணையாகப் பொய்ச் சாட்சி சொல்வதா? முடியாது!'—என் மனம் மேற்கண்ட தீர்மானத்தைச் செய்தது. நிம்மதி பிறந்தது.

* * *

" சார்.... சார்....!''

''என்னப்பா, பிள்ளைக்கு உடம்பு எப்படி இருக்கு?''

''கொஞ்சம் தேவலாமுங்க; மருந்து வாங்கிட்டுப் போகலாம்னு வந்தேன்!''

''நேற்று நான் சொன்னதை யோசிச்சியா?''

''நெனச்சுப் பார்த்தேனுங்க; எம் மனசு இடந்தரலே; எதாச்சும் உளறிடுவேனுங்க. என்னை நீங்க மன்னிச்சுடுங்க, எஜமான்!''

என்னைக்கண்டதும் புன்முறுவல் பூத்த அவர் முகம் என் பேச்சைக் கேட்டதும் ஏன் கூம்பி விட்டது?

கம்பவுண்டர் ஏதோ சிந்தனை பண்ணினர். நர்ஸைக் கூப்பிட்டார். பிறகு போகச் சொல்லி விட்டார்.

"வேலாயுதம், சரி, பரவாயில்லை. நீ வீணைகச் சிரமப் படாதே. குழந்தைக்கு இதைக் கொடு. குடித்ததும் குணமாகி விடும்."

கந்தசாமி இவ்வாறு சொல்லி விட்டு மருந்தைக் கலந்து என்னிடம் நீட்டினர். நான் அவரை வணங்கிப் பிரிந்தேன்.

குமுதா மாறி மாறி என் நினைவில் தோன்றிக் கொண்டே இருந்தாள்!

* *

"மீனா, மீனா! பிள்ளைக்கி இந்த மருந்தைக் கொடு," என்று சொன்னேன். வாங்கி வந்த மருந்தை என் மனைவியிடம் கொடுத்துவிட்டு உடனே கொல்லைப் பக்கம் சென்று விட்டேன்.

அமைதியாக, மன நிறைவுடன் முகம் கழுவிக் கொண்டிருந்த நான் மறு விநாடி என் மனைவியின் பரிதாபமான கூச்சலைக் கேட்டுத் திரும்பினேன்.

"என்னங்க. இந்தாப் பாருங்க; மருந்தைக் குடிச்சதும் குமுதாவின் முகம் ஏன் இப்படிச் சுருங்கிப் போச்சு? வந்து பாருங்க...ஐயோ, எனக்குப் பயமா இருக்குதே!"

எனக்கு ஒன்றுமே புரியவில்லை; தலை சுற்றியது.

கிராம சுகாதார அதிகாரிக்கு ஆள் அனுப்பினேன். அவரிடம் விவரம் பூராவையும் நான் விளக்கினேன்.




"விஷம்....! அந்தப் பாவி கம்பவுண்டர் உங்க மகளுக்குக் கொடுத்த மருந்திலே விஷத்தைக் கலந்து

கொடுத்திருக்கிறான் போல் இருக்கு,'' என்றார் அவர்.

அந்தக் கம்பவுண்டர் இஷ்டப்படி நான் பொய்ச் சாட்சி சொல்லவில்லையென்று உயிருக்குயிரான என் குழந்தை குமுதாவின் உயிரைக் குடித்து விட்டானே பாவி? முருகா....! இதுதான் உன் விளையாட்டா?

குட்டியை இழந்த பெண் புலி போல் வேதனையோடு உறுமிக் கொண்டிருந்தேன் நான்.

மீனா அழுதாள்; நான் அழுதேன். குமுதா மாத்திரம் கண்களைத் திறக்கவில்லை. அப்போது அந்தக் கம்பவுண்டரிடம் வேலை பார்த்துக் கொண்டிருந்த நர்ஸ் ஓடோடி வந்தாள்.

''ஐயா, சற்றுமுன் உங்களுக்காக கம்பவுண்டர் விஷம் கலந்த மருந்தைத்தான் கலக்கியிருந்தார்; உங்களிடம் அவர் வந்து என்னமோ பேசியபோது, நான் அதை தூர ஊற்றி விட்டு, உரிய மருந்தைக் கலக்கி முன்போல வைத்து விட்டேன். முன்னால் கலந்த விஷத்தில் அடியில் ஏதாவது தங்கியிருக்கும்; அதனால்தான் குழந்தை இப்படி மயக்கமாயிருக்கிறது. கவலைப் படாதீர்கள். பிழைத்து விடும் குழந்தை....'' என்றாள் நர்ஸ்.

மறு பத்தாவது நிமிஷம் என்னுடைய அருமைக் குழந்தை குமுதா கண் திறந்தாள்.

நானும் மீனாவும் அந்தப் பெண் தெய்வத்தின் பாதங்களில் விழுந்து வணங்கினோம்.

* * *

அடுத்த விநாடி—

போலீஸ்காரர்கள் இரண்டு பேர், கம்பவுண்டர் கந்தசாமி பின் தொடர அங்கே தோன்றினார்கள்.

என் கண்களை என்னால் நம்ப முடியவில்லை. என்ன அதிசயம் இது ....?

''ஐயா, வேலாயுதம்! என்னை மன்னிப்பீரா?...உம் குழந்தைக்கு நான் விஷம் கலந்து கொடுத்து விட்டேன். நீர் எனக்காகப் பொய்ச்சாட்சி சொல்ல மறுத்ததனால் ஆத்திரம் கொண்ட நான் அப்படித் தவறாக நடந்து கொண்டு விட்டேன். நான் செய்த அநீதிக்கு-பாவத்துக்கு ஆண்டவன் தக்க தண்டனை கொடுத்து விட்டான்...! ஐயோ, உம் குழந்தைக்கு நான் எப்படி ஈடுகொடுக்க முடியும்?'' என்று கதறினார் கம்பவுண்டர்.

அவருடைய கரங்களை அலங்கரித்த விலங்குகளில் அவர் வடித்த கண்ணீர் காணிக்கையாகிக் கொண்டிருந்தது.

'முருகன் முன்னிற்க' என்ற எழுத்துக்கள் அச்சமயம் கம்பவுண்டர் கந்தசாமியைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தன! ★

கருத்து:

அ. வெங்கடேசன்

# இவர்கள் எழுத்தாளர்கள்

## வி. ஸ. காண்டேகர்

'கலை கலைக்காகவே' என்ற கூற்று பொய்த்து விட்டது; அப்படிப்பட்ட கலை வாழ்வதும் இல்லை என்பது வரலாறு கண்ட உண்மை. 'வாழ்க்கைக்காகவே கலை', ஏன், 'வாழ்க்கையே ஒரு கலை' என்ற கொள்கை படைத்த கூட்டத்தைச் சேர்ந்தவர் காண்டேகர். தனது காலத்தையும் பிறரது காலத்தையும் போக்கும் எழுத்தாளர்கள் மத்தியில் லட்சிய வாழ்க்கையோடு வாழ்ந்து வெற்றி பெற்ற கதாநாயகர்கள் 'தினகரன்' ('கிரௌஞ்சவதம்') அசோகன் ('சுகம் எங்கே') போன்றவர்களின் தூய வாழ்க்கையைக் கலையாக்கிப் படைக்கும் காண்டேகர், விண்மீன்கள் மத்தியில் ஒரு வெண்ணிலவு எனக் கூறிடில் பொருந்தும்.

நாவலானாலும் சரி, சிறுகதையானாலும் சரி, அவற்றில் கலை மணம் மட்டும் கமழ்வதில்லை. சிந்தனைக்கு வித்தும் கிடைக்கிறது. வித்து செடியாய் மரமாய்ப் பூத்துக்கனிந்து பயன் தருகிறது என்பதும் உண்மை. ஆம்; அவர் எழுத்தோவியங்கள் சிந்தனையாளருக்கு ஒரு விருந்து; சிந்திக்காதவர்கட்கு அந் நோயைப் போக்கும் ஒரு மருந்து.

'சுகம் எங்கே?'—படைப்புக்களில் ஒரு பகலவன். தொண்டர் என்ற பெயரால் உலவும் சமுதாய விஷப் பூச்சிக்கும், குடும்பத்திற்கே தன் வாழ்வைத் தியாகம் செய்து இறுதி வாழ்வைப் பொதுத் தொண்டாக்கிக் கொள்ளும் அசோகனுக்கும் (கதாநாயகன்) வேறுபாட்டை உணர்த்தி மெய்த் தொண்டன் யாரென உணர வைக்கிறார் ஆசிரியர்.

'கிரௌஞ்சவதம்' ஓர் அமர காவியம். 'சமுதாய உணர்வு இது தான்; அவ்வுணர்ச்சிப் பெற்றது தான் வாழ்க்கை; அவனே எல்லோரிலும் பெரியவன்' என்ற குறிக்கோளை அடிப்படையாக அமைத்து காதல், தியாகம், தொண்டு என்ற உணர்ச்சிகளுக்கெல்லாம் எழுத்துருத் தந்து அமைக்கப்பட்ட மறக்க முடியாத வசன காவியம். மக்கள் தொண்டன் தினகரனை பேராசிரியர் அப்பண்ணாவும் வியக்கும் வண்ணம், அமைத்திருக்கிறார். அதைப் படித்த ஒவ்வொரு இளைஞனும் திலீபனாகவும் தினகரனாகவும் மாற பேராவல் கொள்கிறான்.

'கருகிய மொட்டு'—இந்நாட்டிலும் மேலை நாட்டு மேதைகள் உண்டு எனப் பறையறையும் முரசு.

இவற்றை யெல்லாம் சுவைக்க நான் மட்டுந்தானா அவரை விரும்புகிறேன்; அல்ல! உலகத்தின் பல பகுதிகளிலும் பரந்து கிடக்கும் எண்ணிக்கையில்லாதவர்களில் நானும் ஒருவன். தமிழுக்கும் மராத்திக்கும் இலக்கியப் பாலம் அமைத்துக் கொடுத்த திரு கா. ஸ்ரீ. ஸ்ரீ அவர்களுக்கு இச்சமயத்தில் நன்றி சொல்ல வேண்டும். ★

# திருட்டுப்பயல்

வல்லிக் கண்ணன்

"இதோ இருக்கிறுளே மீனுக் குட்டி, அவள் அப்பா பிள்ளை. அதோ, தரையில் கிடந்தபடி குறும்பு செய்கிருனே அவன் மணிப்பயல். அவன் அம்மா பிள்ளை. மீனு பேரில் எனக்கு ரொம்பவும் பிரியம். மணிப்பயல் மீது அவன் அம்மாவுக்கு அதிக மான ஆசை," என்று பெருமை யோடு சொன்னுர் 'வீட்டு ஐயா'— சிதம்பரம் பிள்ளை.

அத்துடன் அவர் திருப்தி அடைய வில்லை. தம் கையிலிருந்த குழந்தை யோடு கொஞ்சிக் குலாவுவதில் மும்முரமாக ஈடுபட்டார். 'இல்லை யாடி மீனி? நீ அப்பாவின் மீனுக் குஞ்சுதானே? செல்லக்குட்டி தானே?' என்று அன்பாகக் குழைந்தார். பூப் பந்துபோல் தோன்றிய சிறு குழந்தையை ஆர் வத்தோடு தழுவி, கன்னத்தில் முத்தமிட்டு, அதன் சின்னஞ்சிறு உதட்டுச் சிங்காரச் சிரிப்பைப் பார்த்துப் பார்த்து மிக மகிழ்ந்து போனுர்.

அதே அறையில் சுவர் ஓரத்தில் நின்று, சோர்ந்த முகத்தோடு அவ ரையே கவனித்துக் கொண்டிருந்த சிறுவனின் பக்கம் சிதம்பரம் பிள்ளையின் பார்வை ஆசையோடு தாவி ஓடவில்லை. வாட்டம் கொண்டுவிட்ட அப் பூ முகத்தில், ஏக்கம் துளும்ப நின்ற அழகு விழி கள் சிந்திய பார்வையை தந்தை யின் நோக்கு எதிர்கொண்டு ஏற் றுக் கொள்ளவே யில்லை.

அச் சிறுவனை நோக்கியவாறு இருந்த நமசிவாயம் – சிதம்பரத் தின் நண்பர் – "இவன் யார் பிள்ளை?" என்று கேட்டார்.

எதிர்பாராத அந்தக் கேள்வியி ஞல் சற்றே திகைப்படைந்து விட்ட சிதம்பரம் நண்பனின் முகத்தை நோக்கினுர். "ஏன்? நம்ம பையன்தான். ராஜா அவன் பெயர்," என்று சொன்னுர்.

நமசிவாயம் இளம் முறுவல் பூத் தார். "வந்து, மீனு உங்கள் பிள்ளை என்றீர்கள். மணி அம்மாவின் செல்லப்பிள்ளை என்று சொன்னீர் கள். அந்தப் பையன், ராஜா யார் பிள்ளையோ என்ற சந்தே கம், அதனுல்தான் எனக்கு ஏற்பட் டது," என்ருர்.

சிதம்பரத்துக்கு என்ன சொல் வது என்றே விளங்கவில்லை. ஆகவே, "அதுவா?" என்று கேட்டுவிட்டுக் 'கட கட' வென்று சிரித்தார் அவர்.

ராஜாவின் கண்கள் மிரண்டு புரண்டன. நமசிவாயத்தின் பார் வையை எதிரேற்றதும் அவனு டைய பிஞ்சு உதடுகளில் சிறு சிரிப்பு நெளிந்தது. அவன் வெட் கத்தினுல் தலையைத் தாழ்த்தினுன்; மகிழ்வினுல் அம் முகத்தில் சிறு மலர்ச்சி பிரகாசித்தது.

"அவன்தான் மூத்தவன். நாலு வயசு ஆகுது. இந்த மீனுக்குஞ்சு பிறக்கிற வரையில் அவன்தான் ராசாப் பயலாக இருந்தான். அப் புறம் மீனு ராணி வந்து நம்ம இதய ராஜ்யத்தில் தனி இடம் பிடித் துக் கொண்டாள். இவளுக்கு இப்ப இரண்டு வயசு. மணிப்பயல் பிறந்து ஏழுமாசம் ஆகுது. அம்மா வுக்கு அவன் மீதுதான் கொள்ளை ஆசை. அதனுலே ராசாப் பயல் தனிக்காட்டு ராஜா ஆகிவிட நேர்ந்

து.'' என்று பெருமையாகப் பேசினார் பிள்ளைகளைப் பெற்றவர்.

குளுமை என்று எண்ணி அவர் பேசிய பேச்சு எல்லாம் நமசிவாயத்தின் உள்ளத்தில் நெருப்பு மாதிரிச் சுட்டது. அவருடைய கண்கள் மட்டும் ராஜாவைப் பாராதது போல் பார்த்து அளந்து கொண்டிருந்தன.

அந்தச் சிறுவனின் நெஞ்சு விம்மி வடிந்தது. அவன் நாசி நெடிய மூச்சு ஒன்றை வெளியேற்றியது.

'பாவம்! பையனுக்கு தானாகவே பெருமூச்சு வருகிறது. இளம் உள்ளம் ஏங்கத்தானே செய்யும்?' என்று நமசிவாயம் நினைத்தார்.

''ஓடி வாடா, ராஜாப் பயலே! இப்படி வா!'' என்று இனிய குரலில் அவனை அழைத்தார் அவர்.

அவனுடைய முகம் நிமிர்ந்தது. அவர் முகத்தில் அவனுடைய மின்னும் கண்கள் என்ன கண்டனவோ! காலை வெயிலைக் கண்டதும் பொன்மயமாய்ப் பூத்தொளிரும் சூரியகாந்தி போல் அச் சின்னஞ்சிறு அழகு முகமும் சோபை பெற்றது.

''வா வா.... ஓடி வா.... இப்படி வா!'' என்று அவர் விளையாட்டுத்தனம் பயிலவும் அவன் சிரித்தான். அவன் கண்களில் ஆனந்த மயமான ஒளி சுடரிட்டது. அவன் தயங்கித் தயங்கி நின்று, அடி அடியாக அசைந்து நெருங்கிக் கொண்டிருந்தான்.

''ராசாப் பயல் வந்து விட்டான்.... இதோ வந்துவிட்





புதுடில்லி இந்திய அரசாங்க விளம்பர இலாக்கா காரியாலயத்தைச் சேர்ந்த திரு **எம். ராமசுப்பிரமணியன்** அவர்களுக்கும் **குமாரி சேது**வுக்கும் திருநெல்வேலியில் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. மணமக்கள் நீடூழி வாழ்க!

---

டான்.... என்னைத் தொடப் போருன்.... இதோ தொட்டுவிட்டான்...!''

நமசிவாயத்தின் குரல் அவனுக்குக் 'குஷி' ஊட்டிக் கொண்டிருந்தது. திடீரென்று, அதன் வசிய சக்தியைத் தவிர்க்க முடியாதவனுகி, அவன் கலகலவென நகைத்துக் கொண்டு ஓடியே வந்து அவர்மீது சாய்ந்தான். அவர் அவனை வாரி எடுத்துத் தழுவிக்கொண்டார். அந்தப் பையனுக்குப் பொங்கி வந்த உற்சாகத்துக்கு ஓர் அளவு இருக்க முடியுமா, என்ன?

அவன் குதித்தான். ஓடி ஆடி விளையாடினுன். அவரிடம் எவ்வளவோ பேசிக் களித்தான். நமசிவாயமும் அவனுடைய தோழனுகமாறி அவனுக்கு மகிழ்ச்சி ஊட்டிக் கொண்டிருந்தார்.

''பரவால்லியே; பயல் உங்களை பிரண்டு புடிச்சிட்டான் போலிருக்குதே?'' என்ருர் தந்தை.

ராஜாப் பயல் மேலும் மேலும் குதூகலத்தோடு கும்மாளி போடுவதைக் கவனித்த சிதம்பரம் பிள்ளையும், அவர் மனைவி மீனுட்சியும் ஆச்சரியப்பட்டார்கள்.

''இன்னிக்கு அவனுக்கு என்னமோ தெரியலே, ஒரே குஷியாக இருக்கிருன். யாரு கூடவும் அவன் இப்படிப் பேசிச் சிரித்து விளையாடியதே இல்லை. அவன் அம்மாச்சி வந்தால்தான் கொஞ்சம் சந்தோஷமாகக் காணப்படுவான்,'' என்ருர் தந்தை.

அவனுடைய அப்பா விலகிப் போயிருந்த சமயத்தில், ராஜாப் பயல் நமசிவாயத்தின் முகத்தை ஆர்வத்தோடு கவனித்து மெதுவாகச் சொன்னுன்:

''மீனு அப்பாப் பிள்ளை. மணி அம்மாப் பிள்ளை. நான் அம்மாச்சி பிள்ளை.''

இந்த விஷயம் சிறுவனின் உள்ளத்தில் உறுத்திக் கொண்டே இருக்கிறது என்பதை நமசிவாயம் உணர்ந்தார். அவருக்கு அப் பையன் மீது அனுதாபம் ஏற்பட்டது. 'பெற்ருேர்கள் தங்கள் குழந்தைகளுக்கிடையிலேயே பேதம் காட்டுவானேன்? சின்னஞ் சிறுசுகளின் களங்கமற்ற உள்ளத்தில் வேதனை உண்டாக்குவானேன்? தங்கள் தவறுகளை அவர்கள் எப்பொழுதுதான உணர்வார்களோ?' என்ற எண்ணம் அவர் மனசில் படர்ந்தது.

''எங்க ஆச்சி இங்கே அடிக்கடி வரமாட்டாள். எப்பவாவதுதான் வருவாள்,'' என்ருன் பையன். அவன் குரலில் வருத்தமும் ஏக்கமும் கலந்திருந்ததாக அவருக்குத் தோன்றியது.

அவரது மடிமீது புரண்டு கொண்டு, அவருடைய சட்டைப் பித்தானைத் தன் விரல்களினுல் உருட்டி விளையாடியவாறே அவன் கேட்டான், ''நீ ஊருக்குப் போயிரிவியோ?'' என்று.

''ஊம்ம்.... சாயங்காலம் போய் விடுவேன்.''

''ஏன் போறே? இங்கேயே இரேன்,'' என்று பையன் மனுச் செய்தான்.

"இங்கேயே இருந்துவிட முடியாதே. எனக்கு வேறே வேலைகள் இருக்கு, ராஜா," என்று நமசிவாயம் சொன்னார். அவர் கை விரல்கள் அவன் தலைமுடியினூடே கிளு கிளுத்து ஓடிக் கொண்டிருந்தன.

"வேண்டாம். நீ போக வேண்டாம்," என்று கெஞ்சினான் ராஜா.

"ஊம்" என்றார் அவர்.

அவன் ஆனந்த மிகுதியால் அவர் கழுத்தைக் கட்டிக் கொண்டான். பிறகு அவனுடைய உற்சாகம் மேலும் அதிகரித்து விட்டது. 'டேய் சும்மா கிடடா!.... அடேய், சும்மா இருக்கியா, உதைக்கவா?' என்று அப்பா அடிக்கடி அதட்ட வேண்டிய அளவுக்கு அவன் குதியாட்டம் வளர்ந்து விட்டது.

சாப்பிட்டு முடிந்ததும் எல்லோரும் ஓய்வு பெறுவதற்காகப் படுத்தார்கள். ராஜாப் பயலும் படுத்தான். சீக்கிரமே தூங்கிப் போனான். இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு நமசிவாயம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பிய போது கூட அவன் விழித்து எழவில்லை.

'அவன் கண் விழித்ததும் என்னைக் காணாமல் ஏமாற்றம் அடைவான். நான் போய்விட்டதற்காக வருத்தப்படுவான்' என்று அவர் எண்ணினார். உடனடியாகவே இந் நினைப்பும் தோன்றியது:

'அந்த உள்ளத்தில் எத்தனையோ ஏமாற்றங்கள்! எவ்வளவோ வேதனைகள்! இந்தச் சிறு வயசிலேயே ஏனோ இந்த நிலைமை?'

அச் சிறு உள்ளத்தின் ஏக்கங்களையும் ஏமாற்றங்களையும் பற்றியே எண்ணிக் கொண்டிருக்க நமசிவாயத்துக்குப் பொழுது இல்லை. அவருடைய அலுவல்களே அவருக்கு மிக அதிகமாக இருந்தன. அதனால் அவர் அந்தப் பையனை மறந்துவிட்டார் என்று கூடச் சொல்லலாம்.



திருவாளர் டி. ஜி. ஏழுமலை, திருமதி காந்தி அம்மை இவர்களின் தலைமகன் டி. இ. கண்ணபிரானுக்கும் ஜெயகுமாரிக்கும் 9-6-57ல் திருமணம் சிறப்புற நடந்து முடிந்தது. அன்று மாலை திரு சி. எஸ். ஜெயராமனின் இன்னிசைக் கச்சேரி நடந்தது. சென்னையிலுள்ள பிரமுகர்கள் பலர் மணமக்களை வாழ்த்தினார்கள்.

---

சிதம்பரம் பிள்ளையை அவர் அடிக்கடி சந்திப்பதுமில்லை. சில மாதங்களுக்கு ஒரு தடவை, எப்பொழுதாவது, அபூர்வமாக நிகழும் அவர்களுடைய சந்திப்பு.

ஆறு-ஏழு மாதங்களுக்குப் பிறகு, அப்படி ஒரு சமயம், நமசிவாயம் சிதம்பரம் பிள்ளையைச் சந்திக்க நேர்ந்தது. பேச்சோடு பேச்சாக ராஜாப் பயலைப் பற்றியும் சொல்லி வைத்தார் சி. பி.

"அந்தப் பயல்தான் ஒரு மாதிரியாக மாறிக்கொண்டு வருகிறான். மனசிலே ஏதோ எண்ணத்தை வச்சுக்கிட்டு அடம் பிடிக்கிறான். அவன் இப்படி கல்லுளிமங்கத்தனம் யெல்லாம் பண்ணுவான்னு நாங்க எண்ணியதே இல்லை," என்று தந்தை சொன்னார். அவன் தங்கையை அடிக்கிறான். தம்பியைத் தூக்கிக் கீழே போடுவதில் அவனுக்கு உற்சாகம் பிறந்திருப்பதாகத் தெரிகிறது. சில சமயம், "எனக்குப் பசிக்கலே. சோறு வேண்டாம். தண்ணி வேண்டாம்," என்று சொல்லிப் படுத்து விடுகிறான். உடம்புக்கு ஒண்ணும் இல்லாத போதே சீக்கு வந்து விட்ட மாதிரி பம்மாத்துப் பண்ணி,

அழுது அடிச்சு அவன் அம்மாவுக்கு ரொம்பவும் தொல்லை கொடுக்கிறான் – இவ்வாறு குறை கூறினார் பிள்ளை.

நமசிவாயம் ''அட அடா!'' என்றார். பிறகு சொன்னார்: ''மூன்று குழந்தைகள் உள்ள இடத்தில், நீங்கள் அவனை ஒதுக்கி வைத்ததனாலேதான் அவன் இப்படி எல்லாம் செய்கிறான்....''

''நீங்க ஒண்ணு,'' என்று குறுக்கிட்டார் சி. பி.

''நாங்க அவனுக்கு என்ன குறை வைக்கிறோம்? சாப்பாடு தின்பண்டம், நல்ல சட்டை துணிமணி, விளையாட்டுச் சாமான்கள்–எதில்தான் அவனுக்குக் குறைவு?'' என்றார்.

சொந்தக் குழந்தையின் உள்ளத்தைக் கூடச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாத தந்தை மீது நண்பருக்கு அனுதாபம்தான் உண்டாயிற்று. ஆகவே அவர் அதிகம் பேசவில்லை.

நமசிவாயம் மறுபடியும் நண்பரைச் சந்திப்பதற்குள் காலம் வெகு வேகமாக ஓடிவிட்டது. ஓடுகின்ற காலக் கிழவன் அலட்சியமாக ஒரு வருஷத்தை விழுங்கி ஏப்பமிட்டிருந்தான். உலக நிகழ்ச்சிகளையும் மனிதரின் வாழ்க்கைப் போராட்டங்களையும் உள்ளத் துடிப்புக்களையும் பற்றி இதயமற்ற காலதேவனுக்கு என்ன கவலை இருக்கப் போகிறது?

சிதம்பரம் பிள்ளையின் வீட்டில் நமசிவாயம் அடி எடுத்து வைத்த போது, அங்கே அமைதி குலைந்த நிலையே காணப்பட்டது. பிள்ளை ராஜாப் பயலை 'கண்ணு மூக்கு தெரியாமல்' அறைந்து கொண்டிருந்தார். மீனாட்சி, ''செய்றதைச் செய்து போட்டு இப்ப என்ன, குற அழுகை வேண்டிக் கிடக்குது குற அழுகை!'' என்று புலம்பிக் கொண்டிருந்தாள்.

நமசிவாயம் சற்று நேரம் காத்திருந்தார். கோபம் தணியப் பெருத தோற்றத்துடனேயே சி. பி. வந்து சேர்ந்தார். ''என்ன, பையன் என்ன செய்தான்?'' என்று கேட்ட நண்பரிடம் பெரிதாகவே முறையிட்டார் அவர்.

''அந்தப் பயல் வரவரக் கெட்டுப் போறான். அஞ்சரை வயசு ஆகுது. அதுக்குள்ளே இவன் பெரிய திருட்டுப் பயலாக வளர்ந்து விட்டான். ஏதோ தின்பண்டம்–கின்பண்டம் திருடுகிறான்னு நினைக்கிறீங்களா? இல்லையே! அவனுக்குப் பிரயோசனம் இல்லாத சாமான்கள், விலை உயர்ந்த பொருள்களை எல்லாம் அமுக்கி விடுகிறான், ஐயா. சட்டைப் பையிலிருந்து ரூபாய் நோட்டுகளை அபேஸ் பண்ணி எங்கோ பதுக்கி வைத்து விடுகிறான். 'எங்கேடா வைத்தே, என்ன செய்தே' என்று கெஞ்சியும் கொஞ்சியும், உருட்டியும் மிரட்டியும் கேட்கக் கேட்க அவன் சும்மா சிரித்துக் கொண்டே நிற்கிறான். எவ்வளவு உதை வேண்டுமானாலும் கொடுங்கள்; அறையுங்கள்–ஊம் ஹூம்! கல்லுளிமங்கன் கெட்டான் போங்கள். பிறகு, எப்பவாவது, அவனுக்கா இஷ்டம் ஏற்படுகிற போது அதை மறைத்து வைத்திருக்கிற இடத்தைச் சொல்லுவான். இந்தத் திருட்டுப் புத்தி இவனுக்கு எங்கேயிருந்துதான் வந்ததோ?''

சிதம்பரம் பிள்ளை அழாத குறையாகப் புலம்பித் தீர்த்தார். நமசிவாயம் தலையை ஆட்டிக் கொண்டிருந்தாரே தவிர, வாய் திறக்கவில்லை. அவர் மனம் எங்கோ சஞ்சரித்து வந்தது. திடீரென்று அவர் கேட்டார், ''இன்றைக்கு அவன் என்ன செய்தான்?'' என்று.

''திருட்டுப் பயல் தன் வேலையைக் காட்டி விட்டான். மேஜை மீது என் பவுண்டன் பேனா இருந்தது. விலை உயர்ந்தது. அதைக் காணவில்லை. இந்தப் பயல்தான் எடுத்து எங்கோ பதுக்கி வைத்திருக்கிறான். அவனை நயமாகவும் பயமாகவும் கேட்டுப் பார்த்தோம். டேய் ராசா, கண்ணே, மூக்கே



என்றெல்லாம் சொல்லச் சொல்ல அவன் அசையவில்லை. அற்புதமாக எதையோ சாதித்து விட்டு, அந்தப் பெருமையில் சொக்கி நிற்கிறவன் போல, சிரித்துக் கொண்டே இருந்தான். எவ்வளவு தூரம்தான் பொறுக்க முடியும்? கொடுத்தேன் சரியான பூசைக் காப்பு!'' என்று தந்தை தெரிவித்தார்.

நமசிவாயத்தின் உள்ளம் கசப்பு உணர்வைப் பெருமூச்சாக வெளியே கக்கியது. வீணாகக் கெட்டுப்போன குழந்தைக்காக வருத்தப் படுவதா, அப்படிக் கெடும்படி தூண்டிய பெற்றோருக்காக வருத்தப் படுவதா என்றே புரியவில்லை அவருக்கு. குழந்தைகளைக் கவனித்து ஆராய்வதில் சிரத்தை உடையவர் அவர். குழந்தைகளைப் பற்றிய நூல்களை ஆர்வத்தோடு படிக்கும் வழக்கமும் அவருக்கு உண்டு. எனவே, ராஜாப் பயல் ஏன் திருட்டுப் பையனாக மாறினான் என்பதை அவரால் ஒருவாறு ஊகிக்க முடிந்தது.

பெற்றோரின் அன்பையும் கவனிப்பையும் இழந்துவிட்ட பையன் அவர்கள் கவனத்தைத் தன்பக்கம் திருப்பிக் கொள்ள ஆசைப்பட்டான். அது இயல்பு. அதற்காகத்

தான் அவன் சிக்காளி மாதிரி முன்பு செயல் புரிய முயன்றான். உறுதியான உடலும், குறும்புத் தன சுபாவமும் துடிப்பும் பெற்றிருந்த அவனுக்கே அது பிடிக்கவில்லை போலும்! ஆகையால் சுலபமாகப் பிறர் கவனத்தைக் கவருதற்காகத் திருடக் கற்றுக் கொண்டான் அவன்.

சாதாரண சமயங்களில் தன்னைத் திரும்பியும் பார்க்காத பெற்றோர்கள் — தங்கையையும் தம்பியையும் கொஞ்சுவதையே வாழ்க்கை இன்பமாகக் கருதிவிட்ட அப்பாவும் அம்மாவும் — சாமான்களைப் பறிகொடுத்ததும் தன்மீது அபரிமிதமான கவனிப்பைச் செலுத்துவதை அவன் உணர்ந்து கொண்டான். அவர்கள் கெஞ்சினார்கள். கொஞ்சுதலாகவும் நயந்து பேசியும் கேட்டார்கள். இவற்றைப் பெறுவதற்காக அவன் அடியும் உதையும் படவும் தயாராக இருந்தான். அவைகூட அவனுக்கு விசேஷமான கவனிப்புக்களாகத்தான் பட்டிருக்க வேண்டும். அதனால்தான் அவன் சிரித்துக் கொண்டிருக்க முடிகிறது.

இவ்வாறு எண்ணினார் நமசிவாயம்.

"நீங்கள் அடிப்பதனாலும் ஏசுவதனாலும் ராஜாப் பயலின் திருட்டுக் குணத்தைப் போக்கடிக்க முடியாது. அவனுக்குத் தேவையான அன்பையும் கவனிப்பையும் தருவதற்கு நீங்கள் தயங்கக் கூடாது. மற்றக் குழந்தைகளைவிடத் தான் மட்டமானவன் என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் நிலைபெறும்படி விட்டுவிடக் கூடாது. இந்த எண்ணம் நிரந்தரமாகி விடுமானால், அவன் வாழ்க்கையே பாழாகிவிடும்,'' என்று அவர் — நமசிவாயம் நண்பரிடம் சொன்னார்.

அவருடைய பேச்சை அங்கீகரிக்கவும் முடியாமல், வெட்டிப் பேசவும் மனமில்லாமல், மோட்டைப் பார்த்துக் கொண்டு மோவாயைத் தடவியபடி உட்கார்ந்திருந்தார் சிதம்பரம் பிள்ளை. ○